29884

OL/2009/16-T-I, II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2009 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2009 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2009

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலங்கள்
Three hours

## இஸ்லாம் I

கவனிக்க :

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக. வினாத்தாள் I இற்குரிய புள்ளிகள் 40 ஆகும்.
(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என எண்ணிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் எண்ணை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து அவற்றைப் பின்பற்றுக.
(v) I ஆம் II ஆம் விடைத்தாள்களை ஒன்றாகக் கட்டிக் கையளிக்க.

1. ஒரு முஸ்லிம் தனது நன்றியை வெளிப்படுத்துவதற்காகப் பயன்படுத்தும் வார்த்தை
   (1) பாரக்கல்லாஹ் (2) ஜஸாக்கல்லாஹ் கைரன்
   (3) சுக்ரன் (4) அஸ்தஃபிருல்லாஹ்

2. "ஸுஹான ரப்பியல் அஃலா வபிஹம்திஹி" என்ற தஸ்பீஹ் ஓதப்படும் சந்தர்ப்பம்
   (1) தக்பீர் கட்டும்போது (2) இஃதிதாலில் இருக்கும்போது
   (3) ருகூஉவில் இருக்கும்போது (4) ஸுஜூதில் இருக்கும்போது

3. சட்டமுலாதாரங்களுள் வஹ்ீ மத்லுவ்வு மூலம் கிடைக்கப்பெற்ற மூலாதாரம்
   (1) அல்குர்ஆன் (2) அல் இஜ்மா (3) அல் கியாஸ் (4) அல் உர்ப்

4. ஸிஹாஹுஸ்ஸித்தா நூல்களின் இடம்பெறாத இரு ஹதீஸ் கிரந்தங்கள்
   (1) ஸஹீஹ் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்
   (2) ஸினன் அபீதாவுத், ஜாமிஉத் திர்மிதி
   (3) முவத்தா, மிஷ்காதுல் மஸாபீஹ்
   (4) ஸீனன் நஸாஈ, ஸுனன் இப்னு மாஜா

5. "ஹுகூகுல் இபாத்" என்பது
   (1) மனிதன் அல்லாஹ்வின் படைப்புகள் அனைத்துக்கும் செலுத்த வேண்டிய கடமை
   (2) மனிதன் இறைவனுக்குச் செலுத்த வேண்டிய கடமை
   (3) மனிதன் ஏனைய மனிதர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை
   (4) மனிதன் தனக்குத்தானே செய்ய வேண்டிய கடமை

6. ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்த மத்ஹப்களில் முதலில் தோன்றியது
   (1) ஷாபி மத்ஹப் (2) ஹனபி மத்ஹப்
   (3) மாலிகி மத்ஹப் (4) ஹன்பலி மத்ஹப்

7. நபி (ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம் என்பன அடங்கியது
   (1) இஜ்திஹாத் ஆகும். (2) இஜ்மாஃ ஆகும்.
   (3) ஹதீஸ் ஆகும். (4) அல்குர்ஆன் ஆகும்.

[பக். 2 ஐப் பார்க்க

8. பின்வருவனவற்றுள் "ஜராஇமுல் ஹுதூத்" வகையைச் சார்ந்த குற்றங்கள்
   (1) திட்டமிட்ட கொலை, கைமோசக் கொலை
   (2) போதைப் பொருள் விற்பனை, கடத்தல் வியாபாரம்
   (3) திட்டமிட்டுக் காயமேற்படுத்தல், தவறுதலாக காயமேற்படுத்தல்
   (4) விபச்சாரம், களவெடுத்தல்

9. இலங்கை முஸ்லிம்களால் அறிமுகப்படுத்தப்பட்ட வைத்திய முறைமை
   (1) யூனானி மருத்துவம் (2) ஆங்கில மருத்துவம்
   (3) ஆயுள்வேத மருத்துவம் (4) மாந்திரீக மருத்துவம்

10. மரணித்த தனது தயாரின் பேரில் கிணறு வெட்டி வகுப் செய்த நபித்தோழர்
   (1) அபூ ,ஹுரைரா (ரழி) (2) உஸ்மான் (ரழி)
   (3) ஸஃத் இப்னு உபாதா (ரழி) (4) ஸல்மான் (ரழி)

11. ரமழானில் இறுதிப்பத்தில் நிறைவேற்றும்படி ஸுன்னாவில் மிகவும் வலியுறுத்தப்பட்ட ஒரு நற்செயல்
   (1) உம்ரா (2) கியாமுல்லைல் (3) தராவீஹ் (4) இஃதிகாப்

12. "நீண்ட கையுடையவர்" என நபி (ஸல்) அவர்களால் வர்ணிக்கப்பட்டவர்
   (1) ஸைனப் பிந்த் ஜஹ்ஷ் (ரழி) (2) ஜுவைரியா (ரழி)
   (3) உம்மு ஸல்மா (ரழி) (4) ஹப்ஸா (ரழி)

13. ஒரு முஸ்லிமின் சொத்துகளைத் தூய்மைப்படுத்தும் இபாதத்
   (1) ஹஜ்செய்தல் (2) தொழுகையை நிறைவேற்றல்
   (3) ஸக்காத் கொடுத்தல் (4) நோன்பு நோற்றல்

14. ஒரு முஸ்லிம் தனது காரியங்கள் அனைத்தையும் அல்லாஹ்வின் மீது பொறுப்புச் சாட்டி நடப்பதைக் குறிக்கும் பதம்
   (1) தவக்குல் (2) கவ்ப் (3) ரிழா (4) ரஜாஉ

15. மினா, ஸபா, மர்வா, முஸ்தலிபா ஆகிய இடங்களுடன் தொடர்புபடும் இபாதத்
   (1) ஸலாத் (2) உம்ரா (3) ஸவ்ம் (4) ஹஜ்

16. பின்வருவனவற்றுள் நோன்பைச் செல்லுபடியற்றதாக்கும் செயல்
   (1) பட்டினியோடு நோன்பிருத்தல்
   (2) பகலில் தூக்கத்தில் வீனீர் வடிதல் (வாய்க்கோளை வடிதல்)
   (3) இரவில் நீண்ட நேரம் விழித்திருத்தல்
   (4) பெண்களுக்கு பிரசவம் ஏற்படல்

17. "கத்முன்துபுவ்வத்" கோட்பாட்டை மறுப்போரை முஸ்லிம்களிலிருந்து வேறுபடுத்தி நோக்குவதற்கான காரணம்
   (1) அவர்கள் முஸ்லிம்களுடன் இணைந்து தொழாமை
   (2) தனியாக பள்ளிவாசல்களை அமைத்துக் கொண்டமை
   (3) முஸ்லிம்களது மையவாடியில் தங்களது ஜனாஸாக்களை அடக்கம் செய்யாமை
   (4) முஹம்மது (நபி) ஸல் அவர்களை இறுதி நபியாக ஏற்காமை

18. நிரல் "அ" இன் கீழுள்ள சொற்களுக்குப் பொருத்தும் விதத்தில் நிரல் "ஆ" இல் உள்ளவற்றை ஒழுங்கமைத்தால் பெறப்படும் சரியான ஒழுங்கு வரிசை

| நிரல் "அ" | நிரல் "ஆ" |
|---|---|
| (i) இமாம் புகாரி (ரஹ்) | *a.* அர் - ரிஸாலா |
| (ii) இமாம் அபூ ஹனீபா (ரஹ்) | *b.* அல் கானூன் |
| (iii) இமாம் ஷாபி (ரஹ்) | *c.* அத்தாரீஹுல் கபீர் |
| (iv) இப்னு ஸீனா (ரஹ்) | *d.* பிக்ஹுல் அக்பர் |

   (1) *b, a, c, d* (2) *c, a, d, b* (3) *c, d, a, b* (4) *d, b, c, a*

19. இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் மாணவராகவும் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களின் ஆசிரியராகவும் விளங்கியவர்
   (1) இமாம் அபூஹனிபா (ரஹ்) (2) இமாம் ஷாபிஈ (ரஹ்)
   (3) இமாம் புகாரி (ரஹ்) (4) இமாம் முஸ்லிம் (ரஹ்)

[பக். 3 ஐப் பார்க்க

20. அபூபக்கர் (ரழி) அவர்கள் தனது ஆட்சிக்காலத்தில் எதிர் நோக்கிய மிகப் பாரிய பிரச்சினை
    (1) இஸ்லாமிய கிலாபத்தில் வெளிநாட்டவரின் ஊடுருவல்
    (2) உள்நாட்டவரின் கிளர்ச்சி
    (3) நாட்டில் தோன்றிய வரட்சி
    (4) பொய் நபிமார்களின் தோற்றம்

21. பி.ப. 5.30 மணிக்குக் கொழும்பிலிருந்து கண்டியை நோக்கி புறப்பட்ட நீர் மஃரிப் தொழுகை குறித்து எடுக்கக் கூடிய சிறந்த முடிவு
    (1) மஃரிப் தொழுகையை தொழாதிருத்தல்
    (2) கண்டிக்குச் சென்றதும் இஷாத் தொழுகையை நிறைவேற்றுதல்
    (3) கண்டி நகரை அடைந்ததும் மஃரிபையும், இஷாவையும் சேர்த்து தொழுதல்
    (4) கண்டியை அடைந்ததும் இஷாவையும், பின்னர் மஃரிபையும் தொழுதல்

22. ஒருவர் தன்னிடம் வருடம் முழுவதும் வைத்திருக்கும் பாவனைக்கு மேலதிகமான தங்கத்திற்கு ஸகாத் வழங்கு வதற்கான ஆரம்ப நிஸாப்
    (1) 672 கிராமை விட அதிகமாக இருக்க வேண்டும்.
    (2) 85 கிராமைவிட அதிகமாக இருக்க வேண்டும்.
    (3) 20 கிராமை விட அதிகமாக இருக்க வேண்டும்.
    (4) 10 கிராமை விட அதிகமாக இருக்க வேண்டும்.

23. கூட்டு வியாபாரம் நிறைவேறுவதற்கான நிபந்தனைகளுள் ஒன்று
    (1) கூட்டு வியாபாரம் செய்வோர் முஸ்லிமாக இருத்தல்
    (2) இலாப நட்டத்தில் ஊழியர்களையும் பங்கேற்கச் செய்தல்
    (3) இலாபத்தின் தொகையை முன்கூட்டியே தீர்மானித்தல்
    (4) இலாப, நட்டப் பங்கீட்டு விகிதம் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டிருத்தல்

24. ஒரு முஸ்லிம் தனது மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்ய முடியாமைக்கு அடிப்படைக் காரணம்
    (1) அவர்கள் இருவரும் மஹ்ரமிகளாவர்
    (2) அவர்கள் இருவரும் அஜ்னபிகளாவர்
    (3) அவர்கள் ஒருவரை ஒருவர் விரும்பாமை
    (4) அவர்களிடையே வயதுப் பொருந்தாமை

25. "மார்க்கத்தில் நிர்ப்பந்தமில்லை" என்பது
    (1) அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களின் கூற்றாகும்.
    (2) கலீபா உமர் (ரழி) அவர்களின் கூற்றாகும்.
    (3) அல்குர்ஆன் ஆயத் ஒன்றின் கருத்தாகும்.
    (4) நபி (ஸல்) அவர்களின் ஹதீஸ் ஒன்றின் கருத்தாகும்.

26. ஒரு முஸ்லிம் மரணித்த பின்னர் அவர் விட்டுச் செல்லும் சொத்துகளை அவரது சந்ததியினரிடையே எவ்வாறு பங்கிட வேண்டும் என்பது பற்றி விளக்கும் கலை
    (1) இல்முல் ஹதீஸ் எனப்படும்
    (2) இல்முல் கலாம் எனப்படும்
    (3) இல்முல் வராஸத் எனப்படும்
    (4) உலூமுல் குர்ஆன் எனப்படும்.

27. இலங்கையின் சுதந்திரத்திற்காக பெரும்பான்மை சமூகத்துடன் இணைந்து குரல் கொடுத்த முஸ்லிம் தலைவர்களுள் இருவர்
    (1) எம். ஸி. சித்திலெப்பையும், ரீ. பீ. ஜாயாவும்
    (2) ஸேர் ராஸீக் பரீதும், ஏ. எம். ஏ. அஸீஸும்
    (3) ரீ. பீ. ஜாயாவும், வாப்பிச்சி மரிக்காரும்
    (4) ஸேர். ராஸீக் பரீதும், எம். ஸீ. சித்திலெப்பையும்

28. நபி (ஸல்) அவர்களால் கடன் கொடுக்கல் வாங்கல் நடவடிக்கைகளை எழுதுவதற்காக நியமிக்கப்பட்டவர்
    (1) ஸைத் இப்னு ஸாபித் (ரழி)
    (2) அம்று இப்னு உமையா (ரழி)
    (3) ஹாஸிம் இப்னு பத்தஆ (ரழி)
    (4) அப்துல்லா இப்னு அர்கம் (ரழி)

[பக். 4 ஐப் பார்க்க

29884

29. ஹதீஸ்கள் தரம் பிரிக்கப்பட்டமைக்கான காரணம்
(1) ஹதீஸ் ஆய்வாளர்களின் தனிப்பட்ட தீர்ப்பு
(2) ஹதீஸ்கள் திரட்டப்பட்டபோது எழுந்த சந்தேகங்கள்
(3) போலி ஹதீஸ்கள் தோன்றியமை
(4) அல்குர்ஆனும் ஹதீஸும் இரண்டறக் கலந்தமை

30. "மனிதர்களுள் சிறந்தவர்" என நபி (ஸல்) அவர்களால் வர்ணிக்கப்பட்டவர்
(1) மக்களுக்குப் பயன்படுபவராவார். (2) மக்களுக்கு தர்மம் செய்பவராவார்.
(3) அதிகம் ஹஜ் செய்பவராவார். (4) ஏழ்மையாக வாழ்பவராவார்.

31. "அமீருல் முஃமினீன்" என்ற பெயரில் ஸ்பெய்னில் ஆட்சி செலுத்திய உமையா கலீபா
(1) அபூபக்கர் (ரழி) (2) முஆவியா (ரழி)
(3) கலீபா அப்துர் ரஹ்மான் (4) கலீபா அபுல் அப்பாஸ்

32. பின்வரும் செயற்பாடுகள் செல்லுபடியாவதற்கு, "ஈஜாப் கபூல்" இன்றியமையாதவைகள்
(1) திருமணமும் வியாபாரமும் (2) திருமணமும் தலாக்கும்
(3) இத்தாவும் வியாபாரமும் (4) தலாக்கும் இத்தாவும்

33. கர்ப்பிணியான நிலையில் கணவனை இழந்த ஒரு பெண் இத்தா அனுஷ்டிக்க வேண்டிய கால அளவு
(1) நான்கு மாதமும் பத்து நாட்களாகும். (2) மூன்று மாதவிடாய் காலமாகும்.
(3) பிள்ளையை பெற்றெடுக்கும் வரை (4) வைத்தியரை சந்திக்கும் வரை

34. கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் தூண்டுதலினால் பாதுகாக்கப்பட்ட சரீஆத் துறை
(1) தப்ஸீர் (2) ஹதீஸ்
(3) பிக்ஹ் (4) இல்முல்கலாம்

35. மனைவி கணவனுக்கு ஒரு தொகையை வழங்கி விவாக பந்தத்தில் இருந்து நீங்கிக் கொள்ளும் முறை
(1) தலாக் (2) பஸ்க்
(3) ழிஹார் (4) குல்உ

36. முஹம்மது (ஸல்) அவர்களுக்கு முதன்முதலில் வஹி அருளப்பட்ட இடம்
(1) கஃபா ஆகும். (2) மஸ்ஜிதுந் நபவி ஆகும்.
(3) ஹிராக் குகையாகும். (4) தௌர் குகையாகும்.

37. "கியாஸ்" என்பது
(1) சட்ட மூலாதாரங்களுள் ஒன்று (2) வணக்க வழிபாடுகளுள் ஒன்று
(3) கொடுக்கல் வாங்கல் முறைகளில் ஒன்று (4) அல்லாஹ்வின் திருநாமங்களில் ஒன்று

38. ஹஜ்ஜின் பர்ளுகளுள் ஒன்று
(1) அறபாவில் தரித்தல் (2) ஜம்ராக்களில் கல்லெறிதல்
(3) மினாவில் தங்குதல் (4) ஸம்ஸம் நீர் அருந்துதல்

39. தக்வாவை ஏற்படுத்தும் அமல்களில் ஒன்றாக அல்குர்ஆன் தெளிவாகக் குறிப்பிடும் ஒரு இபாதத்
(1) தர்மம் வழங்குதல் (2) தொழுகையை நிறைவேற்றல்
(3) நோன்பு நோற்றல் (4) பள்ளிகளை நிர்மாணித்தல்

40. கர்பலா என்ற இடத்தில் கொலை செய்யப்பட்ட நபி (ஸல்) அவர்களது பேரப்பிள்ளை
(1) ஜஃபர் (ரழி) (2) உஸாமா (ரழி)
(3) ஹஸன் (ரழி) (4) ஹுஸைன் (ரழி)

* *

[பக். 5 ஐப் பார்க்க

## இஸ்லாம் II

※ முதலாம் வினாவினை வேறு நான்கு வினாக்களையும் தெரிவு செய்து மொத்தமாக ஐந்து வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு 20 புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் 10 புள்ளிகளும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை தருக.

(i) "தௌஹீத்" என்ற பதத்தின் எதிர்ச் சொல் என்ன ?

(ii) இலகுவான நஜீஸுக்கு ஓர் உதாரணம் தருக.

(iii) தொழுகையில் ஆரம்பத் தக்பீரை அடுத்து நிறைவேற்ற வேண்டிய பர்ழான அம்சம் யாது ?

(iv) இஸ்லாம் வழங்கியுள்ள மனித உரிமைகள் இரண்டைக் குறிப்பிடுக.

(v) எமது பிரார்த்தனைகள் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு நாம் உட்கொள்ளும் உணவும் பானங்களும் எவ்வாறு இருக்க வேண்டும் ?

(vi) பெண்களுக்கு ஹலாலாக்கப்பட்டு ஆண்களுக்கு ஹராமாக்கப்பட்ட ஆடை, அணிகலன்கள் எவை ?

(vii) ஒரு முஸ்லிம் புனித மக்காவில் மாத்திரம் நிறைவேற்றக்கூடிய இரு கிரியைகளைக் குறிப்பிடுக.

(viii) ஸக்காத்துக்குரிய சகல நிபந்தனைகளும் பூர்த்தியான நிலையில் ஒருவரிடம் காணப்பட்ட 10 இலட்சம் ரூபாவுக்கு அவர் வழங்க வேண்டிய ஸகாத் தொகை யாது ?

(ix) இஸ்லாமியத் தண்டனைகளின் இரு முக்கிய பிரிவுகளும் யாவை ?

(x) "ஹுகூகுல் இபாத்" இற்கு இரு உதாரணங்களைத் தருக.

**2.** (i) "ஷிர்க்கின்" வகைகளைக் குறிப்பிடுக.

(ii) குப்ரை ஏற்படுத்தும் பிரதான வழிகளைக் குறிப்பிடுக.

(iii) ஈமான் ஒரு முஸ்லிம் வாழ்வில் செலுத்தும் செல்வாக்குகள் எவை ?

**3.** (i) ஒரு முஸ்லிம் தனது வாழ்வில் "தயம்மும்" செய்வதற்கான சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.

(ii) நீரின் தன்மையை வைத்து அது எவ்வாறு வகைப்படுத்தப்பட்டுள்ளதெனக் குறிப்பிடுக.

(iii) தொழுகையில் ஸலாம் கொடுத்த உடன் நீர் செய்யக்கூடிய சுன்னத்தான அமல்களைக் குறிப்பிடுக.

**4.** (i) திருமணத்தின் சிறப்பை விளக்கும் ஒரு நபி மொழியைத் தருக.

(ii) பலதார மணத்தின் மூலம் கிடைக்கும் பயன்கள் யாவை ?

(iii) இத்தா அனுஷ்டிக்கும் ஒரு பெண் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகள் யாவை ?

**5.** (i) பாவமீட்சி (தௌபா) பெறுவதற்காக ஒருவர் பேண வேண்டிய நிபந்தனைகளைத் தருக.

(ii) முஹம்மத் (ஸல்) அவர்களே நபிமார்களுள் இறுதியானவர் என்பதை நீர் ஏற்றுக் கொள்வதற்கான காரணங்களைக் குறிப்பிடுக.

(iii) மன அமைதி பெறுவதற்கு இஸ்லாம் காட்டியுள்ள வழிமுறைகள் யாவை ?

**6.** (i) நோன்பின் பிரதான வகைகளைக் குறிப்பிடுக.

(ii) தொழுகையை ஜமாஅத்தாக நிறைவேற்றுவதன் மூலம் நீர் பெறக்கூடிய நன்மைகள் யாவை ?

(iii) ஸகாத்தை முறையாக நிறைவேற்றுவதன் மூலம் ஏற்படும் பயன்கள் யாவை ?

**7.** (i) கலீபா உமர் (ரழி) அவர்கள் தனது ஆட்சிக் காலத்தில் மக்கள் நலன் கருதி மேற்கொண்ட முக்கிய பணிகளைக் குறிப்பிடுக.

(ii) உமைய ஆட்சியாளரான கலீபா உமர் இப்னு அப்துல் அஸீஸ் அவர்களது ஆட்சிக் காலத்தில் இடம் பெற்ற சிறப்பம்சங்கள் யாவை ?

(iii) முஸ்லிம்கள் இலங்கையின் தேசிய நலனுக்கு ஆற்றிய பங்களிப்புக்கள் யாவை ?

※※※